# श्री वेदपादस्तवः

## Sri Vedapadasthava

ஸ்ரீ வேதபாதஸ்தவ



N. SIVARAMAKRISHNAYYA

680

# श्री वेदपादस्तवः

# ( Sri Vedapadasthava )

[ *Edited with a critical introduction in Tamil and a translation into Tamil and English* ]

BY

**P. N. SIVARAMAKRISHNAYYA, B.A., B.T.,**

ASSISTANT,

Samathur Rama Iyengar, Municipal

High School for Boys,

**POLLACHI.**

PUBLISHERS :

**SRI SRINGERI MUTT,**

SRINGERI—KADUR DT. (MYSORE)

 1957 [ PRICE Rs. 1. 25.

# விஷய அட்டவணை



## குறிப்பு

ஸ்தோத்ரப் பகுதியில் சுலோகங்களின் கீழ்க்கொடுக்கப்பட்டுள்ள ஆங்கில எழுத்துக்கள் வேத பாதங்கள் எங்குள்ளன என்பதைக் குறிப்பன வாகும்.

R என்பது ரிக்வேதம்.

Y என்பது கிருஷ்ணயஜுர் வேதம்.

ARU என்பது யஜுர் வேதம் ஆருணம்.

ரிக்வேதத்தில் அஷ்டகம்-அத்யாயம்-வர்க்கம் இவற்றையும்; யஜுஸில் காண்டம்-ப்ரஸ்னம்-பஞ்சாதியையும்; ஆருணத்தில் ப்ரஸ்னம்-பஞ்சாதியையும்; எண்கள் குறிக்கும்.

20—3

ஸ்ரீ

# விக்ஞாபனம்

வேதபாதஸ்தவம் என்னும் சிறந்த இத்தோத்திரத்தின் சிறப்பையும் பெருமையையும் பண்டிதர்கள் வாயிலாகப் பன்முறை கேட்டறிந்த அடியேன் இதனைத் தமிழுரையுடனும் ஆங்கிலானுவாதத்துடனும் பதிப்பிக்கப்பட்டால் மேலும் பலருக்கு நன்மை பயக்கும் என்ற நம்பிக்கை காரணமாக வெளியிடத் துணிந்தேன். இப்பெரும் பணிக்கேற்ற ஆற்றல் அடியேன் பாற் சிறிதுமிலதாயினும் வேதப்பொருளைக் கற்றுணர்ந்த பல அறிஞர்களின் உதவியை உறு துணையாகக் கொண்டு இச்செயலில் முன் வந்துள்ளேன். இவ்வாறு உதவி செய்தவர்களுள் முதன்மை இடம் கேரள ராஜ்ய சித்தூர் கிராம வாசியும் பெரிய அனுஷ்டாதாவுமாகிய ப்ரஹ்ம ஸ்ரீ வேங்கடராம தீக்ஷிதர் அவர்களைச் சாரும்.

இந்நூல் வெளிவருவதற்கு பலவழிகளிலும் அடியேனுக்கு ஊக்கம் தந்து உதவிய பர்மா-ஷெல் கம்பனி டெபோ சூபரின்டென்டண்டு ப்ரஹ்மஸ்ரீ S. வேங்கட சுப்ரமண்ய அய்யர் அவர்கள் ஆவர். அவர் தம் பெயர் குறிப்பிடப்படுவதை மிக வெறுப்பினும், அடியேன் அவருடைய பெயரை குறிப்பிடத்தவறினல் அது நன்றி கெட்ட செயலாகும். ஆதலால் எல்லாம் வல்ல இறைவன் எல்லாவிதமான சீரும், செல்வமும் ஆயுளும் அவருக்கு நல்கவேண்டுமென்று பெரிதும் வேண்டிக்கொள்ளுகிறேன்.

அடியேனுடைய முயற்சியையும், அடியேனையும் ஒரு பொருளாக மதித்து இப்பதிப்பின் கையெழுத்துப் பிரதியைப் பல பண்டிதர்களைக்கொண்டு பரிசோதித்து இதற்கு ஒரு அனுக்ரஹ ஸ்ரீ முகம் அருளிச் செய்து ஸ்ரீ சிருங்கேரி மடத்தின் வெளியீடாக இருக்கட்டும் என அருள் பாலித்த ஜகத்குரு ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீமத் அபி நவ வித்யா தீர்த்த மஹா ஸ்வாமி அவர்களின் கருணையை என்றும் மறவேன்.

பொள்ளாச்சி,
1—4—'57.

**பதிப்பாளன்.**



"शृंगेरी जगद्गुरु अभिनव विद्या तीर्थ महास्वामिनः"

20-3

॥ ॐ ॥

# ॥ श्री शृङ्गेरी श्रीजगद्गुरुसंस्थानम् ॥




श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य पदवाक्य प्रमाण पारावार पारीण यमनियमासन प्राणायामप्रत्याहारध्यान धारणा समाध्यष्टाङ्ग योगानुष्टाननिष्ट तमश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्री शंकराचार्य गुरुपरम्परा प्राप्त षड्दर्शन स्थापनाचार्य व्याख्यान सिंहासनाधीश्वर सकल निगमागमसार हृदय सांख्यत्रय प्रतिपादक वैदिक मार्गप्रवर्तक सर्वतन्त्र स्वतन्त्रादि राजधानी विद्यानगर महा राजधानी कर्णाटक सिंहासन-प्रतिष्टापनाचार्य श्रीमद्राजाधिराजगुरु भूमंडलाचार्य ऋष्यशृङ्ग पुरवरा-धीश्वर तुङ्गभद्रा तीर वासि श्रीमद्विद्याशंकरपादपद्माराधक श्री जगद्गुरु श्री चन्द्रशेखर भारती स्वामि गुरु करकमलसञ्जात ।

## श्री जगद्गुरु शृंगेरी श्रीमदभिनवविद्यातीर्थ स्वामिभिः

अस्मदत्यन्त प्रियशिष्याणां पोल्लाच्चि पि. एन्. शिवराम-कृष्णार्याणां विषये विरचिताः नारायण स्मरण पूर्विका आशिषः समुल्ल-

सन्तु । भवद्भिः प्रणीतं द्राविडभाषामयं वेदपादस्तव व्याख्यानं अवलोकितमस्माभिः । अयं हि स्तवराजः चिदंबरक्षेत्रे श्री नटराजस्य आनन्द नटनावसरे दिविषदां सदसि महर्षिणा जैमिनिना विरचितः । अत्र हि भगवानुमाजानिः स्तूयते । अर्थानुसन्धान पूर्वकं क्रियमाणस्य धर्मस्य विशिष्टं फलमिति शास्त्रवादः । नैके लोकाः संस्कृतानभिज्ञाः अपि भक्त्या स्तवमिमं पठन्ति प्रत्यहम् । भवदारचितं द्राविड भाषा मयं व्याख्यानं तादृशानां बहूनां लोकानां उपकारकमभूदिति महानस्माकं सन्तोषः ।

ग्रन्थभूमिकायां वेदस्वरूपं तदाविर्भावः तन्माहात्म्यं तदनुसारिणां द्राविडागमानां श्रेष्ठता स्तव कर्तुः जैमिनि मुनेः इति वृत्तं इत्यादीन् यथा शास्त्रं प्रतिपादयतां भवतां ज्ञानसम्पदमाकल्प्य नितरां प्रसीदामो वयम् । ग्रन्थोयं आस्तिक जनतायाः सह कार मवाप्य सर्वत्र प्रसृतः लोकान् उपकुर्वन् चिरं जीवतात् । एतत्प्रणेतॄणां भवतां चन्द्रकलावतंसस्य कृपया अभ्युदयपरंपरा भूयासुरित्याशास्महे ॥

दुर्मुख कार्तिकवदि<br>नवमी,<br>अलप्पे निवासः ।



ஓம்

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு சுவாமிகள் அருளிச்செய்த ஸ்ரீ முகம்:—

## ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத் குரு ஸம்ஸ்தானம்




ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய பதவாக்ய ப்ரமாண பாராவார பாரீண யம நியமாஸன ப்ராணாயாம ப்ரத்யாஹார த்யான தாரண ஸமாத்யஷ்டாங்க யோகானுஷ்டான நிஷ்ட தபஸ்சக்ரவர்த்யனாத்யவிச்சின்ன ஸ்ரீசங்கராசார்ய குருபரம்பரா ப்ராப்த ஷட்தர்சன ஸ்தாபனாசார்ய வ்யாக்யான ஸிம்ஹாஸனாதீஸ்வர ஸகல நிகமாகம ஸார ஹ்ருதய ஸாங்க்யத்ரய ப்ரதிபாதக வைதிகமார்க்க ப்ரவர்த்தக ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ராதி ராஜதானீ வித்யா நகர மஹாராஜதானீ கர்னாடக ஸிம்ஹாஸன ப்ரதிஷ்டாபனாசார்ய ஸ்ரீமத் ராஜாதிராஜ குரு பூமண்டலாசார்ய ரிஷ்ய ச்ருங்க புரவராதீஸ்வர துங்கபத்ரா தீரவாஸி ஸ்ரீமத் வித்யாசங்கர பாதபத்மாராதக ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகர பாரதீஸ்வாமி கரகமல ஸம்ஜாத

ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீமத் அபிநவ வித்யா தீர்த்த ஸ்வாமிகளால், ஸ்ரீ ஸந்நிதானத்தின் பிரிய சிஷ்யராயுள்ள பொள்ளாச்சி **P. N.** சிவராமகிருஷ்ண அய்யர் அவர்கள் விஷயத்தில் நாராயண ஸ்மரண பூர்வகமாய் செய்யப்பட்ட ஆசீர்வாதம்.

உங்களால் செய்யப்பட்ட வேதபாதஸ்தவத்தின் தமிழுரையானது எங்களால் பார்வையிடப்பட்டது. இந்த

ஸ்தோத்ரமானது சிதம்பர க்ஷேத்ரத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமான் ஆனந்த நடனம் செய்யும் சமயத்தில் தேவர் களின் சபையில் ஸ்ரீ ஜைமினி முனிவரால் இயற்றப் பட்ட தாகும். இந்த ஸ்தோத்ரத்தில் பகவான் உமாபதி துதிக் கப்படுகிறார்.

ஒரு தர்மத்தைச் செய்யுங்காலத்தில் அதன் பொருளை அறிந்து செய்வது விசேஷமான பலனைத்தரும் என்பது சாஸ்திரங்களின் கருத்தாகையால், சம்ஸ்கிருதம் தெரியாதவர்களும் பக்தியுடன் இந்த ஸ்தோத்ரத்தை அனுதினம் படித்து விசேஷமான பலனை அடைவார்கள். ஆகையால் உங்களால் செய்யப்பட்ட இத்தமிழ் உரை யானது ஸம்ஸ்கிருதம் தெரியாத அநேகம் ஜனங்களுக்கு மிக்வும் உபகாரமாயிருக்கும் என்ற விஷயத்தில் எங்களுக்கு மிகவும் சந்தோஷம்.

இக்கிரந்தத்தின் முகவுரையில் வேதத்தின் ஸ்வரூபம், வேதத்தின் தோற்றம், வேதத்தின் மஹாத்ம்யம், வேதத்தை அனுசரித்துள்ள தமிழ் வேதத்தின் பெருமை, ஸ்தோத்ரத்தை அருளிச்செய்த ஜைமினி முனிவரின் வரலாறு முதலிய விஷயங்கள் சாஸ்திரத்தில் சொல்லிய படி விவரித்திருக்கிற தங்களுக்கு அறிவாகிற சம்பத்தை அடையும் படிச் செய்து நாங்கள் அனுக்ரஹிக்கின்றோம்.

இந்தக் கிரந்தமானது ஆஸ்திக மகாஜனங்களுடைய ஒத்துழைப்பை அடைந்து உலகெங்கும் பரவி உலகத் திற்குப் பேருபகாரத்தைச் செய்து கொண்டு நீண்ட காலம் விளங்கட்டும். இந்த கிரந்த கர்த்தாவாகிய உங்களுக்கு சந்திரகலையை ஆபரணமாகக் கொண்ட பரமேஸ்வர னுடைய அருளால் மேன்மேலும் மங்களங்கள் உண்டா கட்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

துர்முக, கார்த்திக
பகுள, நவமி,
ஆலப்புழை முகாம்.

முத்ரை

॥ श्री वेदपुरुषाय नमः ॥

# ॥ वेदपादस्तवः ॥

# வேதபாதஸ்தவம்

இந்த ஸ்தவம் பீடிகை.

வேத மந்த்ரங்களின் அம்சம் ஒவ்வொன்றை ஒவ்வொரு சுலோகத்தின் கடைசிப் பாதமாக சந்தஸ் சாஸ்திரப்படிக்கு (யாப்பிலக்கணம்) அமைத்து ஜைமினி முனிவரால் சிதம்பரத்தில் ஆன்ந்த நடனம் செய்யும் ஈசனைக் குறித்து இயற்றப்பட்ட ஓர் ஸ்தோத்திரக் கிரந்தமாகும். இது பதினெட்டு சுலோகங்கள் கொண்ட பீடிகையும், ஸ்தோத்திரம் நூற்றிருபத்தாறு சுலோகங்களும், பல சுருதியாய் ஐந்து சுலோகங்களும் கொண்டுள்ளது. ஆனால் சம்பிரதாயக் கிரமத்தில் அன்பர்கள் ஷை சுலோகங்களுடன் வேறு தோத்திரங்களிலுள்ள சில சுலோகங்களையும், பத்து சுலோகங்களுடைய ஆனந்த நடராஜ த்யானத்தையும் இந்த ஸ்தவத்தின் அங்கமாகச் சேர்த்துப் பாராயணம் செய்து வருகின்றனர்.

## வேதம் என்பது என்ன?

प्रत्यक्षेणानुमित्या वा यस्तूपायेन बुध्यते ।
एतं विदन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता ॥

— ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள்.

வேதம் என்பது அறிவின் இருப்பிடம் என்று பொருள் படும். பிரத்தியக்ஷம், அனுமானம் முதலிய பிரமாணங்களைக் கொண்டு தர்மம் முதலிய புருஷார்த்தங்களை அடைவதற்குரிய அறிவை நமக்கு அறிவிக்கின்றது. பிரத்தியக்ஷ, அனுமானப் பிரமாணங்களுக்கு விஷயமல்லாமலிருக்கும் பிரம்மத்தையும் நமக்கு உபதேசிப்பதால் अलौकिकोपायको वेदः என்று சொல்லப்பட்டுள்ளது. தர்மத்தாலேயே மனிதன் மற்ற அர்த்த, காம, மோக்ஷங்களை அடைகின்றான். ஆகவே மற்ற புருஷார்த்தங்கள் தர்மத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன.

"अलौकिकश्रेयस्साधनताबोधकः वेदः ।"

இத்தர்மத்தைப் பற்றிச் சொல்லும் வேதம் தர்மமாகிய பெரிய விருக்ஷத்தின் விதையைப் போன்று விளங்குகின்றது. ஆகையால் वेदोऽखिलो धर्ममूलम् என்று புகழப்படுகின்றது.

தர்மத்தைப்பற்றி விளக்கம்கூறுமுகத்தால் ஆபஸ்தம்பாசாரியர்

धर्मान् व्याख्यास्यामः, धर्मज्ञ समयः, प्रमाणम् वेदाश्च ।

தர்மங்களுக்குப் பிரமாணம் மகரிஷிகளுடைய கொள்கைகளும், வேதங்களுமே என்று சொல்லுகின்றார்.

நியாய சாஸ்திர கர்த்தாக்களும்,

वाक्यम् द्विविधम् लौकिकं वैदिकं च । वैदिकं ईश्वरोक्तत्वात् । सर्वमेव प्रमाणम् ।

என்று சொல்லியிருக்கின்றார்கள். உலகிலுள்ள பேச்சு இரண்டு வகைப்படும். லௌகிகமானது புருஷநிர்மிதமாகும். மற்றொன்று வேத சம்பந்தமாய், அபௌருஷேயமாய், ஈஸ்வரன் போன்று அநாதி ஆனது என்று உபதேசித்திருக்கின்றனர்.

### வேதங்கள் எவ்வாறு தோன்றின ?

வேதங்கள் பகவானால் அனுக்ரஹிக்கப்பட்டவைகள். அநேகம் ஆயிரக்கணக்கான மனித ஆண்டுகள் ஒரு கல்பம் எனப்படும். ஒவ்வொரு கல்பத்தின் முடிவிலும் அப்போதுள்ள உலகங்களும் அதைப்படைத்த பிரம்மாவும் அழிந்து சுத்த சைதன்னியமாகிய பகவான் மட்டிலும் எஞ்சியிருப்பார். மீண்டும் உலகங்களைப் படைக்கப் புதிய பிரம்மா பகவானால் நியமிக்கப்படுவார். இவ்வாறு புதியதாகப் பதவி ஏற்கும் பிரம்மாவிற்கு சிருஷ்டிக்கிரமத்தை அறிந்துகொள்ள பகவான் அனுக்ரகம் செய்கின்றார். ஆதலால் சிருஷ்டிக்கும் வேதமே மூலகாரணமாகின்றது. இதைப் பின்வரும் நியாய சாஸ்திர வாக்குகளால் அறியலாம்.

यः कल्पः सकल्पपूर्वः । इति न्यायेन संसारस्य अनादित्वात् ईश्वरस्य सर्वज्ञत्वात ईश्वरः गतकल्पीयं वेदं अस्मिन् कल्पे स्मृत्वा उपदिशति ।

இதையே यो ब्रह्माणं विदधाति पूर्वम् ।
यो वै वेदांश्च प्रहीणोति तस्मै ॥ என்று

ஸ்வேதாஸ்வதரோபநிஷத் 6-18

லும் சொல்லப்பட்டிருப்பதால் உணரலாகும். பிரம்மா தோன்றியவுடனே, அவருக்கு ஈஸ்வரானுக்ரகத்தால் வேதங்கள் மனதில் தோன்றின. அதாவது உலகம் எங்கும் வேதசப்தங்கள் நிறைந்திருப்பதை ஈஸ்வரகடாக்ஷம் பெற்ற பிரம்மாவினால் அறிய முடிகிறது. ஆகவே பிரம்மா வேதாதிகாரி ஆகின்றார். இவ்வதிகாரியின் மூலமாகவே மற்றவர்கள் வேதங்களை அறியமுடியும். **(The great agency for the dissemination of Vedic knowledge.)**

விஞ்ஞான ரீதியாய் உலகில் ஒலி அலைகள், பேரலை, மத்திய அலை, சிற்றலை, சூக்ஷ்ம அலை எனப் பல பிரிவுகளையுடையன. **(Long waves, Medium waves, Short waves**

Ultra-short waves). நம் வீடுகளிலுள்ள ரேடியோப் பெட்டிகள் சில. ரேடியோ அலைகளை மட்டிலும் கிரஹிப்பது போன்று இக்கல்பத்தில் அவதரித்த ரிஷிகள் சில வேத சப்தங்களை மட்டிலும் உணர்ந்தார்கள். ஈஸ்வரன் சர்வ வல்லமையுள்ள சைதன்னியம். பிரம்மா என்பவர் எல்லா ஒலி அலைகளையும் தாங்கி நிற்கும் வெளி (Ether). வேத காலத்து ரிஷிகள் ஒலி அலைகளை கிரகித்தவர்கள். அதாவது ரேடியோப்பெட்டி (Receiver) போன்றவர்கள். ரேடியோப்பெட்டியில் கேட்கப்படும் கீதங்கள் போன்றன ரிக்குகள், மந்திரங்கள், சாமங்கள். கீதங்களுக்குரிய இராகம், தாளம், இடம், காலம், சாஹித்யகர்த்தா போன்று வேத மந்திரங்களுக்கு, ரிஷி, தேவதை, சந்தஸ் முதலியன உண்டு. ரேடியோக்களிலே பேச்சு வரிசைகள் ஒலிபரப்புவதைப் போன்று வேதங்களில் உரை நடைப்பகுதிகளுமுண்டு. அவைகளுக்கு பிராம்மணங்கள் என்று பெயர். ரேடியோவில் ஒலி பரப்பப்படுவதை நாடா (Tape) முதலியவற்றில் பதிவுசெய்து வைத்துக்கொள்வது போன்று இந்த சுவேத வராக கல்பத்தின் ஆரம்பத்தில் பதிவு செய்து வைக்கப்பட்டவைகளே, நாம் இப்போது வேதங்கள் எனப் போற்றி வருவன. ஒரு சப்தத்தை டேப் மூலம் பதிவுசெய்துவிட்டால், அதிலிருந்து வேண்டும் பல பதிவுகள் மீண்டும் செய்துகொள்ள முடியும். இது போன்ற குரு பரம்பராக்கிரமத்தில், கேள்வி ஞானத்தால் இப்போதுள்ள வேதங்களை நாம் அடைந்துள்ளோம். இதனைப் பூர்வ மீமாம்சையில்

नहि वेदः पुरुषनिर्मितः। वेदाध्ययनं सर्वं गुर्वध्ययन पूर्वकम्। वेदाध्ययन सामान्या दधुनाऽध्ययनं यथा। इत्यादिना वेदस्यापौरुषेयत्वस्य साधितत्वात्। சொல்லியதாலும் நன்கு அறியலாம்.

### வேதங்களுக்கும், ஈஸ்வரனுக்குமுள்ள சம்பந்தம்.

வேதங்கள் ஈஸ்வரனால் உண்டாக்கப்பட்டன என்றால் வேதத்திற்கு ஆதி உண்டாய் விடும். அவ்வாறன்றி வேதம் அநாதியானது. ஈஸ்வரன் எவ்வாறு ஆத்யந்த

ரஹிதனே, அவ்வாறே வேதங்களும் தொடக்கமும், முடிவும் இல்லாதன. ஆகையால் வேதங்கள் ஈஸ்வரனின் மூச்சுக்காற்று என்று சொல்லப்படும். வேதங்களுண்டேல், ஈஸ்வரனும் உண்டு, ஈஸ்வரனிருந்தால் வேதங்களுமுண்டென்பது கருத்து. மூச்சு உட்கொள்ளுதலும், மூச்சு வெளிவிடுதலும் அனிச்சைச் செயல்கள் என்று சொல்லப்படும். நாம் விரும்பினாலும், விரும்பாவிடினும் தாமாகவே நிகழும் செயல் அனிச்சைச் செயலாகும். கண்ணிமைத்தல், ஜீரணம் முதலியன இத்தகைய காரியங்கள். சாதாரண உயிர்களின் அனிச்சைச் செயலுக்கும், ஈஸ்வரனுடைய அனிச்சைச் செயலுக்கும் வேற்றுமையுண்டு. எல்லாம் வல்ல பேரறிவாளனின் மூச்சுக்காற்றே வேதங்கள் என்பது குறித்துப் பின்வரும்.

अस्य महतो भूतस्य निश्वसित मेतद्यदृग्वेदो यजुर्वेद स्सामवेदो थर्वांगिरसः ।

பிரகதாரண்யகோபநிஷத் 2-4-10 வாக்கியத்தாலும் அறியலாகும். இந்த உண்மையை வேதங்களுக்குப் பாஷ்யம் அருளிச்செய்த வித்தியாரண்ய சுவாமிகள்

यस्यनिःश्वसितम् वेदा यो वेदेभ्योऽखिलं जगत् ।
निर्ममे तमहम् वन्दे विद्यातीर्थ महेश्वरम् ॥

என்று குரு வணக்கத்தை வியாஜமாகக்கொண்டு சொல்லுகின்றார்.

### வேதத்தின் சிறப்பு என்ன?

உலகில் சாதாரணமாய் ஒரு பொருளை விளக்க உபமானங்களைக் கையாளுகின்றோம். எப்போதும் உபமான வஸ்து கௌரவம் வாய்ந்ததாக இருக்கும். சந்திரனைப் போன்ற முகம் என்பதில் சந்திரன் என்பது உபமானம், முகம் என்பது உபமேயம். இதில் உயர்வு சந்திரனுக்கேயன்றி முகத்திற்கல்ல என்பது தெளிவு. இந்த ரீதியில் வேதம் என்னும் சொல்லை உபமானப் பொருளில் உபயோகிப்பது ஒரு பொது வழக்காகும். சில உதாரணங்கள் கீழே சொல்லப்பட்டுள்ளன.

(i) நம் நாட்டு இதிகாசங்கள் எனக் கொண்டாடப்படும் நூல்களில் ஒன்று இராமாயணம். இது ஆதி காவியம் என்ற சிறப்புப் பெயராலும் குறிக்கப்படுகிறது. இதைப்பற்றிச் சொல்லும்போது

वेदः प्राचेतसा दासीत। साक्षाद्रामायणात्मना ॥

என்று சொல்லப்பட்டதிலிருந்து, வேதத்தின் மந்திர ராஜமாகிய காயத்ரி மகா மந்திரத்தின் அக்ஷரம் ஒவ்வொன்றையும் ஆரம்பமாகக் கொண்டு ஒவ்வொரு அக்ஷரத்திற்குமாயிரம் சுலோகங்களாக 24,000 கிரந்தங்கள் கொண்டதென்பதும், காயத்ரி மந்திரத்தின் விராட் ஸ்வரூப்மே ராமாயணம் என்றும் பெரியோர்கள் கருதி வருகின்றார்கள். ராமாயணம் வேதசமதை உடையது என்று இராமாயணத்தின் பெருமையை விளக்குவது ஒருபாலிருக்க, அஃது வேதமகிமையையே அதிகம் எடுத்துக் காட்டுகிறது.

(ii) இதிகாசங்களில் மற்றொன்றாகிய மஹாபாரதம் ஐந்தாவது வேதமென்னும் பொருள்பட

भारतः पंचमो वेदः। என்று கூறுகின்றனர்.

(iii) தேவாரம், திருவாசகம் முதலிய அருட்பாக்களைக் குறிக்குங்கால் தமிழ் வேதங்கள் எனப் புகழு மாற்றான் வேதம் என்ற சொற்கொண்டு குறிப்பர்.

(iv) தமிழில், ஏன் உலக நூல்களிலேயே, சிறந்தனவற்றுள் ஒன்று திருவள்ளுவ நாயனார் இயற்றிய திருக்குறள். இந்நூலுக்கு ஒன்பது பெயர்கள் உண்டு. அப்பெயர்களில் ஒன்று தமிழ்மறை' என்பதாகும், இதனை விளக்கத் திருவள்ளுவ மாலையிலுள்ள ஒரு பாடல் பின்வருமாறு :—

“ ஆரியமுஞ் செந்தமிழுமாராய்ந்திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேதமுடைத்து தமிழ் திருவள்ளுவனார்
ஓது குறட்பாவுடைத்து.”

இதனால் வடமொழிக்குச் சிறப்பு அதில் வேதங்கள் இருப்பதால், தமிழுக்குச் சிறப்பு, தமிழின்கண் திருக்குறள் எனும் உலக நூலிருப்பதால் என்று பேசுகின்றது.

(v) திருக்குறளின் சிறப்பு ஒருபாலிருக்க தமிழ் வேதங்கள் எனச் சிறப்பிக்கப்படும் அருள் நூல்கள் தேவாரம் முதலாகப் பெரிய புராணம் ஈறாக உள்ள பனிரண்டு திருமுறைகளாம். வடமொழி வேதங்களைப் போன்றே தமிழ் வேதங்கள் உண்டாக வேண்டுமென்று பகவத் சங்கல்பம். இக்காரணம்பற்றி பல ஒற்றுமைகள் காணப்படுவதால் இவ்வருள் நூல்கள் வேதம் என்னும் இச்சிறப்புப் பெயரைப் பெற்றுள்ளன. ஆகவே தமிழ் வேதங்கள் வேதச் சிறப்பைக் குறிப்பனவேயாம். சில ஒற்றுமைகளை இங்கே குறிப்பிடுகிறோம்.

(a) வடமொழி வேதம் 'ஓம்' என்று பிரணவத்தில் ஆரம்பித்து 'ஓம்' என்ற பிரணவத்தில் முடியும்.

தமிழ் வேதங்கள் 'திருச்சிற்றம்பலம்' என்று தொடங்கி 'திருச்சிற்றம்பலம்' என முடியும்.

(b) வேதங்கள் 'த்ரயி' அல்லது மூன்று எனும் பொருளுள்ள பரியாயத்தால் குறிக்கப்பட்டு ரிக்-யஜுர்-சாமத்தைக்குறிக்கும்.

தமிழ் வேதங்கள் "மூவர் தமிழ்" என்றழைக்கப் பட்டு, திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவர் அருளிச் செய்த, தேவாரப் பாடல்களைக் குறிக்கும்.

(c) வேதங்களைச் சாகைகளாகப் பிரித்து வகுத்தவர் வியாசர்.

தமிழ் வேதங்களைத் திருமுறைகளாகக் கோவைப் படுத்தியவர் நம்பியாண்டார் நம்பி என்பவர்.

(d) வேதங்களில் ருத்ர சூக்தங்கள், சதருத்ரீயம் முதலிய உன்னத மந்திரங்களுள்ளன.

தமிழ் மறைகளில் கீர்த்தித்திருவகவல், போற்றித் திருவகவல், பஞ்சாக்கரப்பதிகம், திருநீற்றுப் பதிகம் முதலியன உள்ளன.

(e) வேதமந்திரங்கள், காயத்ரி, த்ருஷ்டுப், ஜகதி முதலிய சந்தங்களில் ஓதப்படும்.

தமிழ் வேதங்கள் நட்ட பாடை, கொல்லி, சாதாரி முதலிய பண்களில் பாடப்படுவது.

(f) ரிக்-யஜுர்-சாமம் எனும் மூன்று வேதங்களில் நடுவணதாகியது யஜுர்வேதம். அது 101 சாகைகளைக் கொண்டது. அதில் ஐம்பத்தொன்றுவது சாகை போதாயன சாகை. இதில் ஏழு காண்டங்கள் உள்ளன. அதன் மத்திய காண்டம் நான்காவது காண்டம். இதில் 7 பிரஸ்னங்கள், இதில் நாலாவது பிரஸ்னம் ருத்ராத்யாயம் எனச் சொல்லப்படுவது. இதில் 11 அனுவாகங்கள் உள்ளன. இதின் மத்தியில் உள்ளது பஞ்சாக்ஷரம். இதன் ஜீவன் ‘சிவ’ என்ற பதம். இது வேதஹ்ருதயம் என்று மஹான்களால் கருதப்படுகின்றது.

தமிழ்த் திருமுறைகளுள்ளே மூவர் தேவாரங்கள் முதன்மை இடம் பெறும். இவற்றுள் திருஞான சம்பந்த சுவாமிகளது திருமுறை, திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை, சுந்திரமூர்த்தி சுவாமிகள் திருமுறை ஆகிய மூன்றில் நடுநாயகமாக விளங்குவது திருநாவுக்கரசு சுவாமிகளாலியற்றப்பட்ட தேவாரமாகும். இதன் கண் மூன்று திரு முறைகளுள்ளன. மத்தியில் இருக்கும் திருமுறை 5-வது திருமுறையாகும். இதில் 100 திருப்பதிகங்கள் உண்டு. அவற்றின் மத்தியில் விளங்குவது திருப்பாலைத் திருப்பதிகம். இது 11 திருப்பாசுரங்களாலாயது. அவற்றினிடையே இருப்பது “விண்ணிஞர் பணிந்தேத்த” என்று தொடங்கும் பாசுரம். அதில் மிளிர்வது சிவ பஞ்சாக்ஷரம். இதனுயிர்நாடி ‘சிவ’ என்பது. இதுவே தமிழ்த் திருமுறைகளின் இருதயம் எனப் போற்றப்படுகின்றது.

(g) வேதங்கள் பிரணவத்தின் விரிவான வியாக்கியானங்களாகும். பிரணவத்தின் பகுதிகளாகிய அகார-உகார-மகாரங்கள் ரிக்-யஜுர்-சாமவேதங்களின் முதல், இடை, கடை மந்திரங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

தமிழ் வேதங்களில் முதற்கண்ணதாகக் கருதப்படும் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த முதல் திருமுறையின் முதற் பாசுரம் "தோடுடைய செவியன்" என்று ஒகாரத்தில் ஆரம்பித்து தமிழ் மறைகளில் கடைசி பனிரெண்டாம் திருமுறையாகிய பெரிய புராணம் "உலகெலாம்" என்று மகர ஒற்றில் முடிவையும் பெற்றுள்ளதை நோக்குங்கால் 'ஓம்' எனும் பிரணவாபின்னமானது தமிழ் வேதங்கள் என்பது வெளிப்படை.

இதனால் வேதமானது சிறந்த தத்துவங்களைத் தன்னகத்தே கொண்ட முதனூல் என்றும் அதற்கொப்ப ஏற்றம் வாய்ந்த வழிநூல்கள் தமிழ் வேதங்கள் என்றும் ஆராச்சியாளர்களுக்கு நுண்ணிதில் விளங்கும் வேதங்களைப்பற்றி ஆராய்ந்து கண்டறிந்த உண்மைகளைப் பலவாகச் சிறப்பித்து மேனாட்டார்கள் கூறியிருக்கின்றனர். அவற்றில் நமது வேதங்களில் மிக்கு ஈடுபட்டு தமது வாழ்க்கையின் பெரும்பகுதியும் இவ்வாராய்ச்சிக்கு உரிமையாக்கிய மேக்ஸ் முல்லர் (Max Muller) வேதங்களின் பழமையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ள ஓர் வாக்கியத்தைக் கீழே தருகிறோம் :—

"As long as man continues to take an interest in the history of his race, and as long as we collect in libraries and museums the relics of former ages, the first place in that long row of books which contains the records of the Aryan branch of mankind will belong for ever to the Rig Veda."

அதாவது " மனிதன் தன்னுடைய வர்க்கத்தின் வரலாற்றைப்பற்றி அறிய ஆவல் கொள்ளும் வரையிலும், தன்னுடைய நூலகங்களிலும், பொருட்காட்சிசாலைகளிலும் வைக்கத்தகுந்த புராதனச் சின்னங்களைச் சேமித்து வைக்கும் எண்ணம் மனிதனுக்கு நிலவும் வரையிலும், அந்த நீண்ட வரிசை நூல்களுக்குள்ளே ஆரிய வர்க்கத்தினர் ஆற்றிய செயல்களைப் பற்றிக் குறிப்பிடும் ரிக் வேதத்திற்கு எப்போதும் முதன்மை ஸ்தானம் உரியதாகும்." இதன் தொன்மைக்கு இதைவிட வேறு சான்றுகளும் வேண்டுமோ !

# ஆசிரியர் வரலாறு

ஜைமினி முனிவர் இந்த ஸ்தோத்திரத்தின் ஆசிரியர். இவர் வேதவியாசரின் மாணாக்கர்களில் ஒருவர். வியாசருக்கு நான்கு முக்கிய சிஷ்யர்கள் இருந்தனர். அவர்கள் (1) பைலர், (2) வைசம்பாயனர் (3) ஜைமினி, (4) ஸுமந்து, ஆவார்கள். வியாசர் தாம் வகுத்த ரிக்-யஜுர்-சாம-அதர்வண வேதங்களை இவர்களுக்கு முறையே உபதேசித்தருளினார். ஆகவே ஜைமினி முனிவர் வியாசரின் சமகாலத்தவர் என்றும், சாமவேதத்தைச் சார்ந்தவர் என்பதும் அறியக்கிடக்கின்றது. இதைப் பின்வரும் மேற்கோளால் அறியலாம்.

पराशरात्सत्यवत्यामंशांश कलया विभुः ।
अवतीर्णो महाभागो वेदं चक्रे चतुर्विधम् ॥
ऋगथर्वयजुस्साम्नां राशीनुद्धृत्य वर्गशः ।
चतस्रस्संहिताश्चक्रे सूत्रे मणिगणानिव ॥
तासांस चतुरश्शिष्यानुपाहूय महामतिः ।
एकैकां संहितां ब्रह्मन्नेकैकस्मै ददौ विभुः ॥
पैलाय संहितामाद्यां बह्वृचाख्यामुवाच ह ।
वैशंपायन संज्ञाय निगदाख्यं यजुर्गणम् ॥
साम्नां जैमिनये प्राह तथा छन्दोगसंहिताम् ।
अथर्वाङ्गिरशं नाम स्वशिष्याय सुमन्तवे ॥

ஸ்ரீமத்பாகவதம் XII—6—49 முதல் 53 வரை.

## ஜைமினி முனிவரின் சிறப்பு.

வேதங்கள் பகவானின் மூச்சுக்காற்று என்றும், மூச்சு விடுதலும், மூச்சு வாங்குதலும் அனிச்சைச் செயல்

என்றும் முன்னர் சொல்லப்பட்டது. ஆகவே மேற்பார்வைக்கு வேதங்களில் முன்பின் முரண்பாடுகள் தோன்றக் கூடும். சாதாரண மககளுக்கு அவை மயக்கத்தை உண்டாக்கக் கூடுமாகையால் 16 அத்யாயங்களுடன் கூடிய பூர்வமீமாம்சா சாஸ்திரத்தை ஜைமினி முனிவர் அருளிச் செய்து, அதன் மூலம் எந்த வேத மந்திரங்கள் எக்கர்மாக்களில், எப்போது உபயோகிக்கவேண்டும் என்பதைப் பற்றியும், அவற்றின் பொருளையும் விளக்கியுள்ளார். இதில் நான்கு அத்யாயங்கள் கேவலம் தேவதா உபாசனையைப்பற்றி மட்டிலும் கூறுவனவாகும். பூர்வ மீமாம்சா சாஸ்திரத்தின் மற்றைய பனிரண்டு அத்தியாயங்கள் த்வாதஸ லக்ஷணி என்றும் வழங்கப்படும். ஆகையால் வேதங்களுக்கு முதன் முதலாக உரைகண்டவர் ஜைமினி என்று சொல்லலாம்.

## பூர்வமீமாம்சை என்பது என்ன ?

மீமாம்சை என்பதில் "மாங்" என்பது பகுதி, "ஸன்" என்பது விகுதி. இதன் பொருள் சிறப்பான ஆராய்ச்சி என்பதாகும். அதாவது உண்மையான பொருளைப்பற்றி ஆராய்வது என்று ஏற்படுகின்றது. இது வேதத்தின் பூர்வகாண்டத்திற்கு பொருள் நிர்ணயம் செய்வதாகும். பூர்வமீமாம்சை என்பது ஆயிரம் அதிகரணங்களாகப் பிரிக்கப்பட்டிருப்பதால் இதற்கு ஸஹஸ்ராதிகரணி என்ற சிறப்புப் பெயரும் உண்டு. இது

**अथातो धर्मजिज्ञासा ।**

என்று தொடங்கும், சூத்திரங்களாலானது. இப்பூர்வ மீமாம்சை மதக் கொள்கைகளில் முக்கியமானவை :—

(i) பிரபஞ்சம் சத்தியம். மித்தையன்று, (ii) பிரபஞ்சத்திற்கு ஆதியும் அந்தமும் இல்லை. (iii) வேதம் ஆத்யந்தம் அற்றது. (iv) சுவர்க்க நரகாதிகளுண்டு. (v) ஆத்மாவும் ஆத்யந்த ரகிதமானது. (vi) கர்மானுசாரப்படி ஜீவன்களுக்கு மறுபிறவியுண்டு. (vii) யாகாதி கர்மாக்களால் இம்மையிலேயும் சுகம் கிடைக்கும். (viii) வேதப் பொருளுணர்வது சாலச் சிறந்தது.

(ix) இரு பிறப்பாளர்களுக்கே யாகம் செய்வதில் உரிமையுண்டு என்பனவாம். ஆகவே ஜைமினி முனிவர் பூர்வ மீமாம்சா சூத்திரக்காரர். அதாவது ஆசிரியர் ஆவர். இதற்கு பாஷ்யம் செய்தவர் சபர சுவாமிகள். வார்த்திகம் என்னும் பொழிப்புரையை இயற்றியவர் குமாரில பட்டர். இவருடைய மாணாக்கர் மண்டன மிஸ்ரர். பிற்காலத்தில் பூர்வ மீமாம்சைக்கு பாட்டதீபிகை என்ற புதிய வியாக்யானம் ஒன்று இயற்றப்பட்டது. அதற்குப் பல உரைகள் தோன்றின. அதில் சிறந்தது சம்புபட்டர் இயற்றியதாகும்..

## சிதம்பர ரகசியம்.

### 1. ஸ்தூல சிதம்பரம்.

இத்தோத்திரமானது சிதம்பரத்தில் இயற்றப்பட்டது, என்பது முதற்கண் சொல்லப்பட்டது. சிதம்பரம் என்பது பல உயர்ந்த உட்கருத்துகளுடன் கூடிய பதப்பொருள் கொண்ட ஒரு தலமாகும். அதன் உயர்ந்த தத்துவத்தைக் கருதியே சைவர்கள் கோயில் என்ற பொதுப் பெயரால் சிறப்பாக சிதம்பரத்தை வணங்குவர். நம் பாரதத்தின் கண் ஐம்பூதங்களைக் குறிக்கும் ஐந்து தலங்களுள்ளன என்பது யாவருமறிந்த விஷயம். இத்தலங்களிலே இறைவன் இப்பூதங்களின் உருத்தாங்கி உயிர்களை உய்விக்கின்றார். அவற்றுள் ஆகாசம் என்னும் பூதத்தைக் குறிக்கும் ஸ்தலம் சிதம்பரமாகும். இங்கு இறைவன் சிவகாமி என்னும் சக்தியுடன் கூட ஆனந்த நடனம் செய்கின்றார். இதன் உட்கருத்தைச் சிறிது உன்னுவோமாக.

(1) 5 பூதங்களில் ஆகாசமே மற்ற பூதங்களுக்கு உறைவிடமாயுள்ளது. இதன் சேர்க்கையின்றி மற்ற நான்கும் செயலற்றுக் கிடக்கும். இது காரணமாக ஆகாசத்தைக் குறிக்கும் இந்த க்ஷேத்திரம் சிறந்தது என்று ஏற்படுகின்றது.

(2) மேலும் ஈசனின் திருக்கூத்து ஐந்து சபைகளிலே சிறப்பாக நிகழ்வது புராணப் பிரசித்தமானது. அவற்றுள் திருவாலங்காட்டில் ரத்னசபையிலும், திருவாலவாய் என்னும் மதுரையில் வெள்ளியம் பலத்திலும், திருநெல்லையில் தாமிரசபையிலும், திருக்குற்றாலத்திலே சித்திர சபையிலும், திருச்சிற்றம்பலமாகிய தில்லையின் கண்ணே பொன்னம் பலத்திலும் இறைவன் திருநடனம் செய்கின்றார். இவற்றுள் சிதம்பரத்தின் கண்ணுள்ள பொன்னம்பலம் சிறந்த உட்பொருள் கொண்டது. பொன் என்பது தீவண்ண முடையது. இறைவனது நிறமும் அத்தகையது, இதையே,

य एषोन्तर्हृदय आकाशः तस्मिन् अयं
पुरुषो मनो मयः । अमृतो हिरण्मयः । —தைத்ரியம்

அதாவது எந்த இருதயத்திற்குள்ளே எந்த ஆகாசம் இருக்கின்றதோ அவ்விடத்தில் புருஷனும், பொன் போன்ற மேனியுடையவனும், அமிர்தமானவனுமிருக்கிறான் என்று சாந்தோக்யமும் தைத்ரியமும் ஸ்துதிக்கின்றன.

(1) வெளியுலகில் மூன்று முக்கிய ரேகைகள் கண்ணுக்குத் தெரியாமல் சூக்ஷமமாய் ஊடுருவிச் செல்லுகின்றன. அவற்றில் ஒன்று வடக்கே இமயமலைச் சாரலிலும, மற்றொன்று தெற்கேயுள்ள இலங்கைத் தீவு (இப்போதுள்ள இலங்கையன்று) வழியாகவும், நடுவில் செல்லும ரேகை சிதம்பரத்தின் வழியாகவும் செல்லுகின்றன. இம் மூன்று ரேகைகளிலும் முக்கிய ரேகையாகிய நடுரேகையின்கண் ஆண்டவன் தில்லையம்பலத்தில் நடனம் செய்வது புண்ணிய பூமியாகிய பாரதத்தின் மத்ய ஸ்தானத்தைக் குறிப்பதாகும். இதனைக் கீழ் வரும் பாடல்கள் வலியுறுத்தும் :—

"மேரு நடு நாடி மிக்கிடை பிங்கலை
கூரு மிவ்வானின் இலங்கைக் குறியுறுஞ்
சாருந்தில்லை வனத்தண்மா மலையத்தூ
டேறுஞ் சுழுனை இவை சிவ பூமியே."

" பூதல மேருப்புறத்தான தெக்கணம்
ஓதும் இடை பிங் கலையொண் சுழுனையாம்
பாதி மதியோன் பயில் திரு அம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லையினீறே "

" இடைபிங் கலையிம வாதோடிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை
கட்வுந் திலை வனங் கைகண்ட மூலம்
படர்வொன்றி என்னும் பரமாம் பரமே."

திருமூலர்......திருமந்திரம்.

(4) சபாபதியின் தாண்டவத்தில் ஈசனின் பஞ்ச கிருத்யங்கள் (ஐந்தொழில்கள்) சூசிக்கப்படுகின்றன. இதை :—

" தோற்றந் துடியதனிற் றோயுந் திதி யமைப்பிற்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப் பதத்திலுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப் பதத்தே நாடு !'

—மனவாசகங் கடந்த தேவர்.

" பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாம நீர் வரைப் பிறுனில வளாகமும்
ஏனைய புவனமும் எண்ணீங் குயிருந்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுன் அமைத்தகைத்தலமே.
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
ஆற்றுவ தாரழல் அமைத்த தோர் கரமே
ஈட்டிய வினைப் பயன் எவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் ஊன்றிய பதமே
அடுத்த வின்னுயிர்க்ட் களவில் பேரின்பங்
கொடுப்பது முதல்வ நின் குஞ்சித பதமே ".

—குமர குருபரசுவாமிகள்.

"அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரனங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரக மென்னே."

—திருமூலர்.

முதலிய ஆன்றோர் வாக்குகளால் அறியலாம். நடராஜப் பெருமான் தம்முடைய மூன்று திருக்கரங்களாலும் இரண்டு திருவடிகளாலும் பஞ்ச கிருத்தியங்களைச் செய் தருளுகின்றார். தமருகம் என்னும் உடுக்கை ஏந்திய கையால் சிருஷ்டியையும், அபய ஹஸ்தத்தால் ஸ்திதியை யும், மழு ஏந்திய கையால் சம்ஹாரத்தையும், தக்ஷிணை யழுத்திய பாதத்தால் திரோபாவமும், அனவரதம் நடம் புரியும் பாதகமலத்தால் அனுக்கிரகத்தையும் அன்பர் கள் கடைத்தேறுமாறு செய்கின்றார்.

## 2. சூக்ஷ்ம சிதம்பரம்

அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் காணப்படும். புறத்திலுள்ளது அகத்திலும் இருக்கும். இது இயற்கை விதியாகும். ஆகவே சிதம்பரம், தில்லையம்பதி, ஆகாச ஸ்தலம் எனப் பல பெயர்களால் குறிக்கப்படுவது புறச் சிற்றம்பலம் என்று கூறப்படும். இது அண்டத்தில் உள்ளது. இதன் பிரதிபிம்பமாய் பிண்டமாகிய நமது சரீரத்தின் கண்ணும் இறைவன் நடம்புரியுமிடமுண்டு. அது நமது ஹ்ருதயமாகும். புறச்சிற்றம்பலத்திலுள்ள ஆகாசமின்றி மற்ற பூதங்கள் எவ்வாறு தனித்தியங்க முடியாதோ, அவ்வாறே இருதயத்தின் துடிப்பின்றி நம் முடலின் மற்ற அங்கங்கள் செயலற்று, ஸ்தம்பித்து மரணநிலையை அடையும். ஆகவே நமது இருதயத்தைச் சிதாகாசம் என்று யோகிகள் சொல்வர். ஆண்டவன் திருக்கூத்தின் எதிரொலியே நமது இருதயத்துடிப்பு.

புறவுலகில் சூக்ஷ்மமாக மூன்று ரேகைகள் செல்வது போன்று நமது உடலின் கண்ணும் இடைகலை, பிங்கலை, சுழிமுனை என்று மூன்று நாடிகள் ஓடுகின்றன. இவற் றில் நடுவே செல்வது சுழிமுனை என்னும் நாடியாகும்.

இந்த நீண்ட நாடியில் ஆறு சக்கிரங்கள் இருக்கின்றன. இவற்றை ஆருதாரங்கள், ஷடாதாரங்கள், ஆதார சக்கிரங்கள் என்ற பெயர்களால் குறிக்கப்படும். இவற்றில் இரண்டிரண்டிற்கப்பால் ஒவ்வொரு முடிச்சு இருக்கும். இவ்வாறு மூன்று முடிச்சுகள் உள்ளன.

(i) இவற்றிறில் நமது ஆசனத்வாரத்தின் கீழாக அகுல ஸகஸ்ராரம் என்ற ஆயிர இதழ்க்கமலம் விரிந்த நிலையிலிருக்கும். இதன் மேல் மூலாதாரம் என்ற முதற் சக்கிரம் அமைந்துள்ளது. இது முக்கோண வடிவமுள்ளது. நாலிதழ்க்கமலம் போன்றது. இதன் மத்தியிலுள்ள குளகுண்டம் என்னும் பிந்துவை வாயில் கௌவிக்கொண்டு குண்டலினி என்னும் சக்தி உறங்கும். இச்சக்தியானது மூன்றரைச்சுற்று மண்டிலமிட்டுக்கொண்டு பாம்பு போன்று பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கும். இம்மூலாதாரமே சுழிமுனை எனும் நாடியின் மூலஸ்தானம். புறவுலகிலே இது கமலாபுரம் எனும் திருவாரூரைக் குறிக்கும்.

(ii) இதன்மேல் சுவாதிஷ்டானம் என்ற 2-வது சக்கிரம் இருக்கிறது. ஆறு இதழ் தாமரை அலர்ந்தது போன்றிருக்கும். வெளியுலகில் இது அப்பு க்ஷேத்திரமாகிய திருவானைக்காவைக் குறிக்கும். நம்முடலில் லிங்கப்ரதேசத்தின் சமீபம் வியாபித்திருப்பதாகும்.

இந்த இரண்டு சக்கிரங்களுக்குமேல் பிரம்ம கிரந்தி என்னும் முடிச்சுள்ளது.

(iii) சுழிமுனை நாடிப் பிரதேசத்தில் மூன்ருவதாக நிலைத்திருப்பது மணிபூரம் என்ற சக்கிரம். இது பத்திதழ்க் கமலமாகும். வெளியில் இது திருவண்ணாமலையால் குறிக்கப்படும்.

(iv) இதற்கு மேலே நான்காவதாகிய அனுஹத சக்கிரமுள்ளது. இது நமது சரீரத்தில் இருதயப் பிரதேசத்திலுள்ளது. பனிரண்டு இதழக் கமலம் இதன் உருவம். இதை சம்வித் கமலம் என்றும், பூர்ணகிரிபீடம் என்றும் போற்றுவர் யோகியர். இதைப் பஸ்யந்தி

என்னும் தேவியும், ராகினி என்னும் யோகினியும் காத்து வருகின்றனர். பனிரண்டு சூரியர்கள் தம் முழுக் காந்தியுடன் பிரகாசிக்கும் பகுதி. இங்கு ஸிகினி என்னும் சக்தியுடன் பரமேஸ்வரன் இருப்பிடம். இச்சக்கிரம் அண்டத்திலே ஆகாச ஸ்தலமாகிய சிதம்பரத்தைக் குறிக்கும்.

இதன் மேலுள்ளது விஷ்ணுக்கிரந்தி என்னும் முடிச்சு.

(v) இதற்கப்பால் விசுத்தி என்னும் சக்கிரம். மனிதனின் கழுத்துப் பகுதியே இது. இது பதினாறிதழ் கமலம். உலகில் வாயுக்ஷேத்திரமாகிய காளஹஸ்தி இதைச் சுட்டுகிறது.

(vi) இதற்குமப்பாலுள்ளது ஆக்ஞை என்ற ஆறுவது சக்கிரம். இது புருவமத்தியில் இரண்டு இதழ்க்கமலமாக பிரகாசிப்பது. உலகில் இதன் சின்னமாக விளங்குவது காசி என்னும் ஸ்தலமாகும். இதற்கப்பாலுள்ளது ருத்திரக் கிரந்தி என்பது.

(vii) இதற்கும் மேலாக ஸஹஸ்ராரம் என்ற ஆயிரம் இதழ்களுடன் ஜ்வலிக்கும் சக்கிரம் இருக்கிறது. இதைச் சந்திரமண்டல மென்றும், துவாத சாந்தமென்றும், பிரம்மரந்திரம் என்றும் பல பெயர்களாற் குறிப்பிடுவர். வெளியுலகில் கைலாசம் இதன் சின்னமாகும், இதனை, பரஞ்சோதி முனிவர் வாக்கும் வலியுறுத்தும் :—

"திருவளராரூர் மூலந் திருவானைக்காவே நாபி
மரு வளர் பொழில் சூ ழண்ணாமலை மணி பூரநீவிர்
இருவருங்கண்ட மன்ற மிதயமாந் திருக்காளத்தி
பொருவருங் கண்டமாகும் புருவ மத்தியாங் காசி."

—திருவிளையாடல் 802.

மேற் கூறிய வற்றால் சரீரத்தினுள்ளோடும் சுழிமுனை நாடியின் மத்திய ஸ்தானம் இருதயமாகிற சிதாகாசம் என்பது விளங்கும். இதுவே சிதம்பரம். இங்கும் இறைவன் கூத்து நிரந்தரமாக நடைபெறுகின்றது. புறச் சிற்றம்பலமாகிய தில்லை (சிதம்பரம்) ஸ்தூல ரூபமானது. அகச் சிற்றம்பலமாகிய தஹராகாசம் (ஹ்ருதய குகை) சூக்ஷ்மமானது.

## 3. காரண சிதம்பரம்.

காரணம் என்பது சூக்ஷமத்தின் நுட்பமாகும். இக்காரண சிதம்பரம் பிரணவமாகும். இது சப்த ரூபமானது. புறச் சிற்றம்பலத்தும் (சிதம்பரம்), அகச் சிற்றம்பலத்தும் (ஹ்ருதயாகாசம்), மூன்று ரேகைகளும், மூன்று நாடிகளும் முறையே செல்வது போன்று, காரண சிதம்பரமாகிய பிரணவத்திலும் மூன்று அக்ஷரங்களுண்டு. அவை அகார, உகார, மகாரங்களாகும். இவை வேதப்ரதி பாத்தியமானவை. வேதமே பிரணவாகாரம். வேதங்களில் முதலாவதான ரிக்வேதம் ' अग्निमीळे पुरोहितं । என அகாரத்தில் தொடங்குவதும், யஜுர் வேதத்தின் கடைசி மந்திரம்; योनिस्समुद्रो बन्धुः । என்று உகாரத்தில் முடிவதும் சாம வேதத்தின் கடைசிச் சாமம் समानम् वरम् । என்று மகாரத்தில் முடிவதும் பிரணவத்தின் விராட் ஸ்வரூபமே வேதங்கள் என்பதைச் சந்தேகத்திற்கிட மின்றி விளக்குகின்றன. இதனாலேயே ஜைமினி முனிவர் தம்முடைய ஸ்தவத்திலே

नमः प्रणव वाच्याय नमः प्रणवलिंगिने ।

என்று துதிக்கின்றார்.

இப்பிரணவத்திற்கு திருஸ்ய ரூபமும் உண்டு. அது ஐந்து பாகங்கள் கொண்டதாகும். அவையாவன? (1) நக்ஷத்திர வடிவம் (2) தண்டவடிவம் (3) குண்டல வடிவம் (4) அர்த்த சந்திரவடிவம் (5) பிந்து வடிவம். இதை

प्रथमम् तारकाकारम् द्वितीयं दण्डमुच्यते ।
तृतीयं कुण्डलाकारं चतुर्थं ह्यर्ध चन्द्रकम् ।
पञ्चमं भिन्दु संयुक्तं प्रणवं पंचलक्षणम् ॥

எனக் காமிகாமம் வர்ணிக்கின்றது. இவ்வைந்து வடிவங்களே இறைவனின் ஐந்தொழில்களை எடுத்துக் காட்டுகின்றன.

ஆகவே இந்த ஸ்தவ ராஜமானது ஸ்தூலரூபமான சிதம்பர க்ஷேத்திரத்தையும், சூக்ஷ்ம ரூபமான தஹராகாசத்தையும், காரணமான பிரணவத்தையும் பிரதிபாதிப்பதாகும்.

## இந்த ஸ்தவத்தின் சிறப்பு.

இந்த தோத்திரத்தில் யதுகை, மோனை, பிராசம் முதலிய சொன்னயங்களும், பொருணயங்களும் மலிந்திருக்கின்றன. அவைகள் திருப்பித்திருப்பிச் சொல்லி மகிழ்வதற்குரியன வாகும்.

2. வேத மந்திரங்களை அங்கமாகக்கொண்டு இயற்றப்பட்ட பல தோத்திரங்களுள்ளன. இவற்றில் ஸ்கந்த வேதபாதஸ்தவம், தத்தாத்ரேய வேதபாதஸ்தவம் ஆகிய இரண்டும் அச்சிடப்பட்டுள்ளன. சைவாகமப்படி, கோவில் என்றால் சிதம்பரத்தையும், வைணவாகமப்படி கோவில் என்றால் திருவரங்கத்தையும் குறிப்பது போன்றும்; கோவை என்னும் பிரபந்தங்கள் பலவுளவாயினும், சிறப்பாகத் திருக்கோவையார் என்பது மாணிக்கவாசக சுவாமிகளால் இயற்றப்பட்ட திருச்சிற்றம்பலக்கோவையாரைக் குறிப்பது போன்றும்; பழம் என்பது பொதுவாக, மரங்களின் பழுத்த கனியைக் குறிக்கும் பொதுச்சொல்லாக இருக்க சிறப்பாக வாழையின் கனியைக் குறிப்பது போன்றும்; பல வேத பாதஸ்தவங்களிருப்பினும் தனித்து வேதபாதஸ்தவம் எனின், ஜைமினி முனிவரால் இயற்றிய இந்த வேதபாத ஸ்தவத்தையே குறிப்பது இதன் தனிச்சிறப்பாகும்.

3. மற்ற வேதபாத ஸ்தவங்களின் ஆசிரியர்கள் இன்னாரென்று அறியப்படாமலிருக்க இந்தக் கிரந்தமானது அதனுடைய கர்த்தாவின் பெயருடன் விளங்குவதன் காரணமாக இது மட்டிலும் ரிஷிப்ரோக்தம் என்றும், மற்ற வேதபாதஸ்தவங்கள் சாமானிய ஜனப்ரோக்தமானவை என்றும் உணரலாம். இதர வேதபாத ஸ்தவங்களின் ஆசிரியர்கள் தன்னடக்கம் காரணமாகவோ, அல்லது முனிதிலகமாகிய ஜைமினி முனிவருடன் ஒப்பாகத் தாங்களும் அவர் இயற்றியதைப்போன்று கிரந்

மியற்றியுள்ளவர்கள் என்ற சமத்துவ முறையில் சேர்த்து எண்ணப்படுவதற்குத் தகுதியற்றவர்கள் என்ற எண்ணம் காரணமாகவோ, தங்கள் பெயர்களை மறைத்திருக்கக் கூடும். அது எவ்வாருயினும் இந்நூலின் சிறப்பிற்கு இதுவுமோர் காரணமாகும் என்பதில் ஐயமின்று.

4. வேத காலத்து ரிஷிகள் ஒரு பாலிருக்க, வேதங்களை வகுத்த வியாசரின் சிஷ்யர் என்ற முறையிலும், வேதங்களின் பொருளை நன்கு ஆராய்ந்து ஸகஸ்ராதிகரணியை இயற்றியதாலும் வேத மந்திரங்களைப் பகுதியாகக் கொண்ட இச்சிறந்த தோத்திரத்தை இயற்ற முழுத் தகுதியும் வாய்ந்தவர் ஜைமினி என்று சொல்லலாம்.

5. ஜைமினி முனிவர் தாம் இயற்றிய தோத்திர நூலில் உபக்கிரமத்தில் துதி செய்த கணபதி, சுப்ரஹ்மண்யர், தேவி இவர்களை உபசம்ஹாரத்திலும் குறிப்பிட்டு வணங்குவது சம்பிரதாயத்தின் பெருமையை நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

6. இந்த ஸ்தவத்திலுள்ள சில சுலோகங்களின் கருத்துக்களையும், பதங்களையும் அவ்வாறே காலத்திஞல் பிற்பட்ட மதிப்பிற்குரிய ஆசிரியர்கள் கையாண்டிருப்பதினின்றும் இந்தக் கிரந்தத்தின் சிறப்பு விளங்காநிற்கும்.

(a) ईशान ते तत्पुरुष नमो घोराय ते सदा ।
वामदेव नमस्तेऽस्तु सद्योजाताय वै नमः ॥

என்ற ஒரே சுலோகத்தில் ஈஸ்வரனின் ஐந்து முகங்களை ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் எனக் குறிப்பிட்டிருப்பதைப் பின்னல் அவதரித்த ஸ்ரீ ஆசாரிய சுவாமிகளவர்கள் தாம் இயற்றிய சிவகேசாதி பாதாந்தவர்ணன ஸ்தோத்திரத்தில் பின் வரிசைக் கிரமமாய் சத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்று ஒரே சுலோகத்தில் குறிக்கின்ஞர் :—

सद्योजाताख्यमाप्यं यदु विमलमुदग्वर्ति यद्वामदेवं
नाम्ना हेम्ना सदृक्षं जलदनिभमघोराह्वयं दक्षिणं यत् ।
यद्बालार्कप्रभं तत्पुरुषनिगदितं पूर्वमीशान संज्ञं
यद्दिव्यं तानि शम्भोर्भवदभिलषितं पञ्च दद्युर्मुखानि ॥

சுலோ-13. சிவபாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்.

(b) ஜைமினி முனிவர் त्वत्समो न प्रभुत्वेन என்று தொடங்கும் 54-வது சுலோகத்திலுள்ள கருத்தை சங்கர பகவத்பாதாள் தாம் இயற்றியுள்ள சிவானந்தலஹரியில்

प्रभुस्त्वं दीनानां खलु परम बन्धुः पशुपते
प्रमुख्योऽहं तेषामपि किमुत बन्धुत्वमनयोः ।
त्वयैव क्षन्तव्या शिव मदपराधाश्च सकलाः
प्रयत्नात्कर्तव्यं मदवनमियं बन्धु सरणिः ॥

சிவானந்தலஹரி-சுலோ-14.

இக்கருத்தையே குறிப்பிட்டிருத்தலைக் காணலாகும். மேலும் தமிழில் தாயுமானவரும்,

"என்போல் எளியவரும் எங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரும உண்டோ பராபரமே"

என இக்கருத்தைச் சொல்லுகின்றார்.

(c) தமிழ் வேதங்களாகிய தேவார, திருவாசகங்களிலே, இந்த தோத்திரத்திலுள்ள பல கருத்துக்களிலும், வரலாறுகளிலும, கருத்துக்களைச் சொல்லுமுறைகளில் ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

सहस्राम्नाय साम्बाय என்று ஆரம்பமாகும் சுலோகத்தின் கருத்தை,

"ஆயிரந் தாமரை போலு மாயிரஞ் சேவடியானும்
ஆயிரம் பொன் வரை போலு மாயிரந்தோளுடை
யானும்
ஆயிரம் ஞாயிறுபோலு மாயிர நீண் முடியானும்
ஆயிரம் பேருகந்தானு மாரூரமர்ந்த வம்மானே."

—அப்பர் சுவாமிகள்

தேவாரத்திலும் त्वमेवोमापते माता त्वं पिता என்ற 52-வது சுலோகத்தின் கருத்தை,

"அப்பனீ யம்மைநீ யையனுநீ யன்புடைய மாமனு
மாமியுநீ
ஒப்புடைய மாதரு மொண் பொருளுநீ யொரு
குலமுஞ் சுற்றமுமோருரு நீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய் நீ துணையா
யென்னெஞ்சந்துறப்பிப்பாய் நீ
இப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத்து நீயேறூர்ந்த
செல்வனீயே"

— அப்பர் சுவாமிகள்

குறிப்பிடுவதும் कीटा नागाः पिशाचा वा ये वा என்ற 60-வது சுலோகத்தின் கருத்தை அப்பர் சுவாமிகள்

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடியென்
மனத்தே
வழுவாதிருக்க வரந்தரவேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க்கிரங்கி யருள் செய் பாதிரிப் புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடைமேல் வைத்த
தீ வண்ணனே"

என்றும்,

ஜைமினி முனிவர் தாம் அருளிச் செய்துள்ள ஸ்தவத்தில் கால்கள், கைகள், சிரம், கண்கள், செவிகள், மூக்கு, நாக்கு, மனம் ஆகியவற்றைச் சம்போதனப் படுத்தி அவற்றிற்கு அறிவுரை பகர்கின்றார். இம் முறையிலே

அப்பர் சுவாமிகளும் தாம் பாடிய தேவாரப் பதிகங்களுக்குள்ளே அங்கமாலை என்னும் பதிகத்திலே இதே கருத்துக்களை கேசாதி பாதாந்தக்கிரமத்தில் கூறுவது பாடி இன்புறுதற்குரியது.

**रक्षमामक्षमं क्षीणमक्षक्षत** என்ற 40-வது சுலோகத்தில் நீலகண்டனை சம்போதனப் படுத்திப் பிரார்த்தனை செய்வதை

" புலன்கள் திகைப்பிக்க யானுந் திகைத்திங்
கொர் பொய்ந் நெறிக்கே
விலங் குகின் றேனை விடுதி கண்டாய்
விண்ணு மண்ணு மெல்லாங்
கலங்க முந்நீர் நஞ்சமுது செய்தாய்
கருணாகரனே
துலங்கு கின்றேனடி யேனுடையாயென்
தொழுகுலமே"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் தமது திரு வாசகம் என்னும் தேனில் நஞ்சுண்ட நீலகண்டனை விளித்துத் தோத்திரம் செய்கின்றார்.

ஜைமினி முனிவர் புலவர்களையும், இசை வாணர்களையும் நோக்கி, " பிறரைப் பாடாது ஈசனைப் பாடுங்கள். உங்களுக்கு இம்மை, மறுமைகளில் சுகம் கிடைக்கும்" என்று **गायका यूयमायात यदि** என்ற 68-வது சுலோகத்தில் சொல்லியுள்ளதையே,

" தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்மை யாளரைப் பாடாதே யெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தருஞ் சோறுங் கூறையு
மேத்தலாமிடர் கெடலுமாம்
அம்மையே சிவலோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே"

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் அமைத்திருப்பதும் அறிந்து மகிழ்வதற்குரியது.

இவ்வாறாக இந்த ஸ்தோத்திர ராஜத்தில் சொல்லப்பட்டுள்ள கால சம்ஹாரம், திரிபுர தகனம், தக்ஷயாகத்தின் அழிவு முதலியவற்றைக் கூறும் பகுதிகள் ஆங்காங்கு தேவார, திருவாசகங்களிலும், மற்றுமுள்ள உயர் நூல்களிலும் ஒருப்போன்று இருக்கின்றன.

ஆகவே இந்த ஸ்தோத்திரமானது மனத்திற்கு எட்டாத கருத்துக்களைத் தன்னகத்தே கொண்ட வேத மந்திரங்களைப் பாகமாகக்கொண்டு இயற்றப்பட்டமையாலும், சீரிய தத்துவங்களைக் குறிக்கும் சிதம்பரத்தின் கண் அருளிச் செய்யப்பட்டமையாலும், எல்லா வகைகளிலும் யோக்யதாம்சங்களையுடைய ஜைமினி முனிவரால் அருளிச் செய்யப்பட்டிருப்பதாலும், இதனைப் பாராயணம் செய்வோர்க்கு இகபர சுகாதிகளை நிச்சயம் தரும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அன்பர்கள் இதன் பொருளுணர்ந்து பிரதி தினம் சந்தியா காலத்தில் நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துப் பின்பு இதனைப் பாராயணம் செய்து ஜன்ம சாபல்யம் அடையவேண்டுமென்று பிரார்த்திக்கும்

பக்தர்களின் பாதபாம்ஸு,

சிவராமகிருஷ்ணையா.




॥ श्रीरस्तु ॥

॥ श्री मीनाक्षी सुन्दरेश्वराभ्याम् नमः ॥

# ॥ वेदपादस्तवः ॥



वक्रतुण्ड महाकाय कोटिसूर्य समप्रभ ।
निर्विघ्नं कुरुमेदेव सर्वकार्येषु सर्वदा ॥ १ ॥

வளைந்த துதிக்கையுடன் கூடியவரும், பெரிய சரீரத்துடன் கூடியவரும், கோடி சூரியர்களுக்குச் சமமான காந்தியுடன் கூடியவருமான தேவன், எல்லாக்காரியங்களையும். எப்போதும் இடையூறின்றி முடிக்கவேண்டும். (1)

1. May the Deva, with an indentured trunk and a monstrous physical stature with the effulgence equivalent to that of millions of suns protect us from all impediments and lead us to success.

कुण्डली कृतनागेन्द्रं खण्डेन्दु कृतशेखरम् ।
पिण्डीकृत महाविघ्नं दुण्डिराजं नमाम्यहम् ॥ २ ॥

ஸர்ப்பராஜனைக் குண்டலமாகக் கொண்டவரும், பிறைச் சந்திரனைத் தலையில் தரித்தவரும், பெரிய இடையூறுகளை ஒன்றாகத் திரட்டக் கூடியவரும், ஆகிய துண்டி (அதிபதியாகிய) கணபதியை வணங்குகிறேன். (2)

2. I bow unto that Dundi Raj whose earrings are formed by the serpent kings and who secured the crescent and who is capable of collecting all the impediments into one mass.

मातामह महाशैलं महस्तदपितामहम् ।
कारणं जगतां वन्दे कण्ठादुपरि वारणम् ॥ ३ ॥

இமயமலை யரசனைத் தாய் வழிப் பாட்டனாக உடையவரும், தகப்பன் வழிப் பாட்டன் இல்லாதவரும், கழுத்துக்கு மேல் யானை உருவத்தை உடையவரும், பிரபஞ்சத்திற்குக் காரணமாய் விளங்குபவருமான பெரிய சக்தியை உடையவரை நமஸ்கரிக்கின்றேன். (3)

3. My salutations unto Him, whose maternal grand-father is the mighty Himalayas and who has become great because of none claiming to be his grand-father on the paternal side and who has the form of an elephant above his neck. He is the origin of all the worlds.

वन्दे महेश्वरं शम्भुं विघ्नेशं षण्मुखं गुरुम् ।
गणेशान् नन्दिमुख्यांश्च शिवभक्तान् महामुनीन् ॥ ४ ॥

மகேஸ்வரனையும், கணபதியையும், சுப்பிரமணியரையும், குல குருவையும், கணங்களுக்குத் தலைவரான நந்தி முதலானவர்களையும் சிவ பக்தர்களாகிய முனிவர்களையும் நமஸ்கரிக்கின்றேன். (4)

4. My salutations to Sambhu, the great Iswara, the Lord who has control over all the impediments, the Deva with the six faces, the preceptor, the Sacred Bull and the lords of all divine beings and the sages devoted to Siva.

उमापत्यमुमा जानिमुमां चोमा सहोदरम् ।
उमान नान्दरं पद्मां विधिं वयमुपास्महे ॥ ५ ॥

உமா காந்தரையும், உமையின் குமாரரையும், உமையையும், உமையின் சகோதரராகிய திருமாலையும், உமையை நாத்தியாராகப் பெற்ற லக்ஷ்மி தேவியையும், பிரம்ம தேவரையும் நாங்கள் சேவிக்கின்றோம். (5)

5. Our obeissance to those Devas who trace their relationship to Uma, viz., her husband (Umapathi, her sons, Uma herself; her brother Vishnu, her sister-in-law (Lakshmi of the lotus fame, the consort of Vishnu, her brother), and her nephew Brahma.

पञ्चाक्षरतनुं पञ्चवदनं प्रणवम् शिवम् ।

अपारकरुणारूपं गुरुमूर्तिमहं भजे ॥ ६ ॥

ஐந்தெழுத்தைச் சரீரமாக (நமசிவாய என்பதை) உடையவரும், ஐந்து சிரங்களுடன் கூடியவரும், பிரணவத்தால் துதிக்கப்படுபவரும், மங்கள ரூபமுள்ளவரும், அளவற்ற கருணைக் கடலானவருமாகிய குருவின் ஸ்வரூபத்தை நான் வணங்குகின்றேன். (6)

6. My salutations to Him, (Sri. Dakshinamurthy) the Guru incarnate with the sacred five-syllabled manthra (Panchakshara) as his body, the five faces representing the symbol of Om (Pranava), the very personification of compassion, with the physical form of immense beautitude.

नमो निष्कलरूपाय नमो निष्कलतेजसे ।

नमः सकलनाथाय नमस्ते सकलात्मने ॥ ७ ॥

உருவமற்ற கலா ரூபிக்கும், உருவமற்ற தேஜோ வடிவமுடையவருக்கும் நமஸ்காரம். எல்லாப் பிராணிகளின் தலைவருக்கு நமஸ்காரம். சிருஷ்டி எல்லாவற்றிலும் பிராணரூபமாய் இருக்கும் உருவத்திற்கு நமஸ்காரம். (7)

7. My salutations to that Great Lord, formless and effulgent with Kala, who is immaculate and who is the life principle in all the animate beings and who controls the entire creation.

नमः प्रणववाच्याय नमः प्रणवलिङ्गिने ।

नमः सृष्ट्यादि कर्त्रे च नमः पञ्चमुखाय ते ॥ ८ ॥

பிரணவத்தினல் சொல்லப்படுபவருக்கு நமஸ்காரம். பிரணவத்தை அடையாளமாக உடையவருக்கு நமஸ்காரம். சிருஷ்டி முதலிய காரியங்களைச் செய்பவருக்கு நமஸ்காரம். ஐந்து முகங்களுடன் கூடியவருக்கு நமஸ்காரம். (8)

8. My salutations to Him, who is extolled by the Pranava, who has Pranava as his symbol, who is the lord of creation and other ordinances with his five faces.

पञ्चब्रह्मस्वरूपाय पञ्चकृत्याय ते नमः
आत्मने ब्रह्मणे तुभ्यमनन्त गुणशक्तये ।
सकलाकलरूपाय शम्भवे गुरवे नमः
श्री गुरुचरणारविन्दाभ्यां नमः ॥ ९ ॥

ஸத்யோஜாதம், வாமதேவம், தத்புருஷம், அகோரம், ஈசானம் என்னும் உருவமுடையவரும், சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்னும் ஐந்து தொழிலையுடையவரும், முடிவில்லாத குண சக்திகளுடன் கூடிய வரும் பக்தர்களுக்கு சகுணரூபியாயும் இயல்பாக நிர்க்குணராயுமுள்ளவருமான குருஸ்வரூபத்திற்கு வணக்கம். ஸ்ரீ குருவின் திருவடி மலரிணையை வணங்குகின்றேன். (9)

9. My pranams are dedicated to that Sambhu, the greatest of all preceptors, who is an amalgam of the five Brahmas, intent on creation, maintenance, dissolution, obscuration and benevolence and who is meditated upon with and without his divine attributes.

पुण्डरीक पुराधीशं पुण्डरीकाजिनाम्बरम् ।
पुण्डरीकरुचिं वन्दे पुण्डरीकाक्ष सेवितम् ॥ १० ॥

புண்டரீகபுரம் (சிதம்பரம்) என்னும் க்ஷேத்திரத்தின் தலைவரும் (அல்லது ஹிருதயத்தில் வீற்றிருப்பவரும்),

